உ

கடவுள் துணை.

வள்ளியம்மன்

# அலங்காரச்சிந்து.



விநாயகர் துதி - நேரிசைவெண்பா.

கொடியிடையாள்வள்ளி கொடியதவமிருந்து
வடிவேலன் றனை மணந்தவற்புதத்தைப்படிமிசையான்
அலங்காரமாய்ப்பாட யானைமுகாவென்னுவில்
விலகாமற்குடியிருக்க வெண்.

இவை - சிறுமணவூர்

முனிசாமிமுதலியாரா லியற்றப்பட்டு,

ஆ - இரத்தினவேலுமுதலியாரது
வாணீவிலாஸ அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1898

சென்னை நாராயணமுதலிவீதி 52-வது நெம்பர் வீடு.

(தெம்)ஒன்பதுரத்தினமும் உருக்கிவிட்டபதுமையைப்போல்
அன்னநடைவள்ளியம்மை யருந்தபசுபுரிந்திட்டாளே (நன்)
ஐயா-ஆடைநீக்கிஅழகுநீக்கி அணிந்தபணிகள்முழுதும்நீக்கி
வாடைநீக்கிவரிசைநீக்கி வனத்தைநோக்கிமனதுதாக்கி
ஐயா-ஊசிமுனையில்காலைநாட்டி வாசிமுனையில் மனதைபூட்டி
சுழியின்முனையில்விழியையோட்டி சுருதிமொழியைமழையாய்வாட்டி
வருகவருகவடிவேல்வருக வருகமுருகனருகில்வருக (நன்)
(தெம்) இப்படியாய்வள்ளியம்மை இருக்குந்தவக்கொடுமை
முப்புரமுந்தேவர்களும் முழித்தல்லவாபிரண்டுவிட்டார் (ந)
ஐயா-இந்திரனுலகம்செந்தணல்பறக்கஇமயோராதிகள்சமயந்துலங்க
சந்திரசடையன்சிந்தையுந்துடிக்க சதுர்முகனும்மனதுகலங்க
ஐயா-வாட்டமுற்றதைகேட்டுமுருகர் ஒட்டமாகவேகாட்டின்வழியே
தாட்டிமயிலைநாட்டமாகவே கூட்டுந்தவத்தின்பேட்டியடுத்து
அடி-கொஞ்சம்வயதுகொடியதவத்தில் கெஞ்சிவருந்தவிபரமேது (ந)
(தெம்) இன்னமணம்புரியலியோ இளவயதாய்க்காணுதடி
என்னகுறைநேர்ந்ததென்று இப்பேர்ப்பட்டதவமிருக்கிறாய் (நன்)
அடி-சின்னவயதுசித்திரவடிவு கொஞ்சம்வயதுகுழந்தைபார்வை
யிந்தவயதிலென்னவருத்தம் யிப்போப்பட்டதவத்தில்பொருத்தம்
அடி-வாயைத்திறந்துவருத்தங்கூறு வரத்தைவாங்கியிடத்திற்சேரு
சேயையின்றுசுகமாய்வாழு சாரத்தொல்லையகடந்துதேரு
அடி-எடுவுன்கரத்தேபிடிநீவரத்தேவிடுவுன் தவத்தேநடவுங்கிடத்தே
(தெம்) ஒன்றுங்குறைவுமில்லை யொருவரமும்வேண்டயில்லை
யென்னைமணம்புரிவீரென்றே யித்தனைநாள் தவமிருந்தேன் (நன்)
ஐயா-ஊரும்வேண்டாம்பதியும்வேண்டாம் ஒருவருறவும்பகையும்வே
ண்டாம், பொன்னும்வேண்டாம்பொருளும்வேண்டாம்புகழும்வேண்
டாம்யிகழும்வேண்டாம்.
ஐயா-எனக்குமாலைசூட்டவேண்டும் இன்பசுகத்தைகாட்டவேண்டும்
உனக்குமனைவியாகவேண்டும் உலகம்புகழவாழவேண்டும்
கருத்தையுணர்த்தேவருத்தம்விடுத்தே பொருத்தம்பிடித்தேமாலைமு
(தெ)தவமிருந்தயெனையழைத்துதாலிகட்டச்சொல்லுகிறாய்[டித்து
மகளுறவாய்நேர்ந்துபோச்சே மாலையிடவுங்கூடுமோடி (நன்)
அடி-இந்திரன்மகளென்மனைவியாச்சே யுந்தன்குலமோகுறவராச்சே
யெந்தவிதத்தில்புரியும்பேச்சு உலகஞ்சிறிக்குமிந்தபேச்சு
அடி-ஏனோமனதில்வருத்தமுற்றாய் இன்னோர்பிறவிஎடுக்கபோறும்
அடி-கொஞ்சநாளேகுறயைத்தாளே வஞ்சிக்கொடியேவருத்தம்சகி
(தெம்) இப்பிறப்பில்மணம்புரிய ஏலாதென்றுசொல்லிவிட்டு
அற்புதமயில்மேலேறி யாண்டவனுந்தணிகைசேர்ந்தார் (நன்)
அப்ப-கந்தனுரைத்தமொழியையறிந்து கன்னிவிசனகடலில்விழுந்து
யிந்தஜென்மமெடுத்தும்பழுது யிருந்ததவமுமொழிந்ததென்று
புரண்டுஅழுதுபுத்தியைமறந்தாள் உருண்டுஅழுதுஒங்கிவிழுந்தாள்
இருந்துஅழுதுஏங்கிவிழுந்தாள் என்னிடவுயிரும்வேண்டாமென்று
மோதியடித்துமுகத்தையடித்தாள் ஆவிவிடுத்தாளண்டம்அடுத்தாள்
(தெம்)இங்கேநடந்ததெல்லாம் எம்பெருமான்தானறிந்து

மங்கையுடனிருவருமாய் மானுருவமெடுத்திட்டாரே (நன்)
ஐயா-கன்னிவருத்தமுடிக்கவேண்டி கந்தன்மனதை திருத்தவேண்டி
தன்னுடவைகுண்டமதனைத்தாண்டி தைரியலட்சுமிமனதைதூண்டி
ஐயா-மானைப்போலவடிவமெடுத்து மாருவனத்தைதஊருயடுத்து
மதனுரதியும்கிளியும்போலத் தொடுத்துரிதமும்கலவியெடுத்து
ஐயா-உள்ளமகிழ்ந்துஉறவாயிருந்தார்வள்ளிகொடியில்மகளாயின்றார்
(தெம்)வேட்டைத்தொழிலுடைய வேடுவர்களப்பொழுது
காட்டுவழிவருகையிலே கண்டாரேகுழந்தைதன்னை
ஐயா-வாரியெடுத்துமாரோடணைத்தார்உச்சியைமுகர்ந்துஉடம்போட ணைத்தார், கனியைபோலே கடித்துபார்த்தார்கன்னியைப்பொன்னி டஏளியேயென்றார். (நன்)
ஐயா-வேட்டையாடமரந்துபோட்டார் வீட்டைதேடிதிரும்பிபோட் டார்,கோட்டைப்புகுந்துமனைவியழைத்தார்குழந்தையெடுத்துக்கை யிலேகொடுத்தார் பார்த்து
தங்கமென்றார்தாளமென்றார் சிங்கமென்றார்சித்திரமென்றார் (நன்)
(தெம்)பிரவியெடுத்தமுதல் பெருமலடிவேடுவச்சி
திருவுருவைவாங்கினதே திரண்டுதையாமார்பிரண்டும் (நன்)
ஐயா-அன்னமென்றார்அமுர்தமென்றார்அமரருலகம்ரதியேயென்றார்
பொன்னேயென்றார்பொருளேயென்றார்போதாதிந்தபேர்களென்றார்
ஐயாதெள்ளும்வனத்தில்திருவைபோல தேசமயங்கும்கிளியைபோல
வள்ளிக்கொடியிலிருந்ததாலே வள்ளியென்றுஅழைக்கமேலே
ஐயா-பணிகளளித்தார்பாதுகாத்தார்இங்கிதளித்தார்ஏந்திவளத்தார்
(தெம்)நித்தமொருநிறமாய் நேரிழையாள்தான்வளர்ந்து
புத்தியறிந்தவுடன் புனங்காக்கவந்திட்டாளே (நன்)
ஐயா-உத்தமதாதியர்அருகிலிருக்க உயர்ந்தபரணைமீதிற்சிறக்க
சித்திரகவுண்டுகையிலேயிருக்க சிங்காரவள்ளியும்வாயைத்திறக்க
ஐயா-ஆலோஆலோஅன்னக்கிளியே அருகேவாங்கவர்ணக்கிளியே
காலப்பயிரைகெடுக்காதிங்கோ கானகமிருக்கும்போய்பிழையுங்க
ஐயா-காட்டுப்பறவை ஓட்டநினைப்பாள் தீட்டிகவுண்டைமாட்டி யடி
(விருத்தம்)தங்கிடவுயிர்போல்காக்குந்தாதிமாருடனேவள்ளி[ப்பாள்
உன்னிதப்பரணைமீது வுயிர்வரயிருக்கும்போது
தென்பொதிமலையைத்தாண்டி திருட்டுநேரதனுமங்கே
கன்னியின்வுருவைப்போலே கைப்படமெழுதலுற்றான்
(தெ)பொதிகைமலைகடந்து பின்புரணிநாரதனும்
விதிதுலைத்துபோகாமலே வந்துநின்றான்புனத்தருகே (நன்)
ஐயா-அற்புதகிளியோ அனங்கன்ரதியோ அமரர்பதியோ குமரர்நிதி
அழகிலிவளைப்போலேவுலகில் அறியேனறியேனேயோசிவனே [யோ
ஐயா-சமரபுரியில்வேலன்வடிவும் சரியேசரியேயிவளின்வடிவு
பிரமனெப்படிஅமைத்திட்டானோ படத்திலெப்படிஎழுதுவேனோ
உத்துபாரத்துஉருதிபிடித்தார்படத்தைஎடுத்தார்பதியதொடுத்தார்
(தெம்)மேகம்போல்கூந்தலிட்டு மின்னலைப்போல்சுட்டியிட்டு
சோகவர்ணகிளிகள்போல சுந்திரமாய்பின்னல்போட்டான்(ந)
ஐயா-சந்திரன்போலவதனமெழுதி சகலவசியதிலர்தமெழுதி

குமிழிபோலஸ்தனத்தையெழுதி சித்தசன்காமரசத்தைஎழுதி
ரவிக்கையிருகஸ்தனங்கள்நெருங்க கரும்புக்கணையில் அரும்புசொரிய
(தெம்) ஆலிலைபோல்வயறெழுதி அரவமெனப்படமெழுதி
சேலையதிற்சேர்த்தெழுதி சித்திரம்போல் சரிகைகோர்த்தான்
ஐயா-கரும்பைபோலகரங்களெழுதி கரத்தில்வளயல்பொருந்தஎழுதி
விரல்கள்தோறுமோதிரமெழுதி வண்டயம்போலக்கண்களெழுதி
ஐயா-வாழைபோலதுடைகளெழுதி வச்சிரம்போலகணைக்காலெழுதி
தண்டைஎழுதிகொலுசைஎழுதி கொண்டைநிறையமலரைஎழுதி (ந)
(தெம்) பொன்னாபரணமெல்லாம் பூட்டிஎழுதிவிட்டு
மன்மதனும்பின்னிடவே மதனத்தேமல்கலந்துபார்த்தான் (ந)
வள்ளிபடத்தைஎழுதிபிடித்தார்நாவலர்பெண்களைநினைத்துசிரித்தார்
பார்த்துபார்த்துமனதுதுடிப்பான் படத்தைஎடுத்துஓடிவருவான்
ஐயா-காடுகடந்துசெடிகள்கடந்து கானகவிலங்குமலைகள்கடந்து
வேர்த்துவேர்த்துஓடிவந்தான் விடியுமுன்னமேதணிகைசேர்ந்தான்
ஐயா-படத்தைக்கொடுத்தான் பாதத்தில்விழுந்தான்
காட்டிக்காட்டி காலைப்பிடித்தான் (நன்)
(தெம்) பன்னிரண்டுகையாலும் படமேந்திவேல்முருகர்
தன்னைமறந்தல்லவா தரையுடனேமூர்ச்சையானார் (நன்) [து
ஐயா-மோகம்பெருகிமூர்ச்சையாகிமுழித்துவிழித்துபடத்தைபார்த்
வாயைத்திறந்துவார்த்தைகூறடி வருத்தமிருந்தாலதுவுஞ்சொல்லடி
கோபம்பொறுத்துமுகத்தைப்பாரடி கோடிசரணம்தயவுசெய்யடி
அடி-பிடையூறொன்னடிஎடுத்துபோடடி தடையிதென்னடிதகுதியல்
(தெய்-தெம்) திருட்டுமுனிநாரதனே தேசத்துகுண்டுணியே [லடி
ஒருகம்பத்திலிரண்டானையை ஒட்டவைக்கவந்தாயோடா (நன்)
அடடா-இல்லாவார்த்தைகள் முடியாய்போடுறாய
எங்கையோயிருந்துபடத்தைகொணர்ந்தாய்
உன்னிடகுலத்து தொழிலேகாட்டுகிறாய் ஒருவர்குடியைரொண்டாய்
அடடா-குண்டுணியுனக்கு யிதுவேதொழிலா [பிரிக்கிறாய்
கூட்டிக்கொடுக்க வெட்கமில்லையா
தாடியுஞ்சடையுமுனக்குஏதடா தாடையில்போடுவேன் வெளிஏநட
அடடா-உனக்கு நரைத்துபோச்சே நாளுமாச்சே [டா
திருட்டுப்பேச்சே குடியாய்ப்போச்சே (நன்)
(நார-தெம்) ஒன்றுமறியேனம்மா ஒருகுடியுங்கெடுக்கவில்லை
சென்றுவந்தவழிகளிலே கண்டதைநான்சொன்னேனம்மா (ந)
அம்மா-பொதிகைமுதலாய்மலைகளெல்லாம்பார்த்துபார்த்துதவத்தி
பதினாலுலகந்தேடிதேடிப் பாலதவழியாய்வந்தேனம்மா [லிருக்க
அங்கே-சித்திரசாலையும்சந்தனச்சோலையும் பத்தரைமாத்துபடிகத்து
றையும், அன்னக்கிளிகள் அமர்ந்தபுனமும் ஆருமறியா பூங்காவனமும்
ஐயா-வழியில்பார்த்தேன் வந்துவுரைத்தேன்
பழியைத்தீர்த்தேன் பாதம்பிடித்தேன் (நன்)
(தெ) வேடனைப்போல்வடிவெடுத்து வேலமுருகரோதுசெய்தார்
ஜாடைசொல்லிநாரதனை தந்திரமாயழைத்துகொண்டார் (நன்)

ஐயா-குண்டுணிநாரதன்முன்னால்நடக்ககுமரவேடன்பின்னால்நடக்க
கண்டவனத்தைதிரும்பிபார்க்க கந்தர்மனதுவள்ளியைநோக்க [ண்டு
வள்ளிவள்ளியென்றழைத்துக்கொண்டு வழிகள்தோறும்பார்த்துகொ
நளினவனத்தைதேடிக்கொண்டு நடக்குமனமும்சகித்துக்கொண்டு
ஐயா-புனத்தைக்கண்டு பெண்ணேயென்றார் வனத்தைக்கண்டுவள்ளி
(சுப்பிரமணியர்சொல்-தெம்மாங்கு.) [யென்றார்

வஞ்சியிளங்கொடியே வளரும்மூன்றாம்பிறையே
கொஞ்சும்பிளங்கிளியே கொல்லுதடிகாமபாணம் (நன்)
அடியேகாமரதியேகனகக்கொடியேகாய்க்கும்வடிவேபூர்க்கும்வயதே
தேமலொளியே திருவினுருவே தெய்வலோகவருணக்கிளியே
அடியுன்னை-வனத்தில்விட்டபாவிகளாரு வஞ்சனைசெயததெய்வமுங்
இந்தவயதில்ஒண்டியாயிருக்க எப்படியுனக்குமனமும்வந்தது [கூறு
அடியே-காமமீறுதேகவலையாகுதே சாமன்கணைகள்மாரில்தைக்குதே
தேமல்முலைகளென்னைப்பார்க்குதே திருவுமுன்னிடமுகத்தில்நிற்குதே
அடி-யஞ்சனவிழியேயமுர்தமொழியே கொஞ்சுங்கிளியேசோர்த்தமல்லி
சஞ்சலமொழியேசைகைசொல்லடி சனுதிபரணையேறிவாரோண்டி
அடியேதாமதமென்னடிதயவுசெய்யடி காமனைவெல்லடிகட்டிசேரடி
(தெம்) ஆருடையகற்பழியஅனியாயஞ்செய்தேனையோ
தாறுமாறாயென்னையிப்போ தனிவழியில்பேசுறானே (நன்)
ஐயோஐயோஆதிசிவமே அண்டபுவனம்உண்டபொருளே
கைகளீராறுடையமுருகா காலகாலனீன்றபாலகா
ஐயா-மருதைவீரமாடன்முனியா விரதமிருக்கும்விட்டுக்காளி
தொட்டியசின்னதுரையேகருப்பா துஷ்டனைவனேதுள்ளிவிழுறான்
ஐயா-இந்தவிதியும்நேர்ந்துபோச்சா என்னுடவிரதமழிந்துபோச்சா
கற்புஅழியகாலமாச்சா காக்கும்தெய்வம்விலகிப்போச்சா
ஐயா-கன்னிதவத்திலென்னகுறைவு என்னைபழிக்கபார்த்திருக்கிறீர்
(தெம்) மாதுவருத்தமுற்று மார்புரளத்தானழுவே
வேதனைகள்நேர்ந்துதென்று வேறேயொருவடிவெடுத்தார் (ந)
ஐயா-வளையல்சுமையதோளிலிட்டார்வள்ளியும்பரணையிறங்கிவிட்டா
அருகிலழைக்கதாதியைவிட்டாள் அடுத்தவுடனேவிலையைகேட்டாள்
ஐயா-தேனுந்தினையுந்தருவமென்றாள் காணும்வளையலிடுவமென்றாள்
(தெம்) தேனுந்தினைமாவும் தின்னபசியில்லையடி
மானேயென்மோகந்தீர மருவியிருந்தாலபோதுமடி (நன்)
அடி-ஒன்பதுரத்தினமிழைத்தவளையல்உந்தனுக்கேத்தசந்திரவளையல்
முத்துவளையல்மோகனவளையல் மூன்றுலோகமும்மதிக்கும்வளையல்
அடியே-யிந்திரவளையல்மந்திரவளைய லிமையோராதிகள்மயங்கும்வளைய
செந்தியில்முருகன்செய்தவளையல் சிவகாமிமருமகளின்வளையல்[ல்
அடியே-விலையைக்குறித்து விசனம்வேண்டாம்
வளையல்குறித்து வருத்தம்வேண்டாம் (நன்)
(தெம்)பிச்சைக்குவந்தபயல் பெண்டாளஅழைத்ததுபோல்
கொச்சைமொழியுரைக்கவந்தாய்கொடுத்திடுவாயெமனுக்குயிர்(ந)
ஐயா-அருகிலண்ணமார்காவலிருக்கிறார்ஐயோவுன்னிடவுயிராயறிப்
பெண்டுபிள்ளையிருந்துதானால்போயிபார்த்துபிழைத்துபோடா [பார்

ஐயோ-இந்தவயதிலிறக்கநாளோ ஏனோதனியேமாண்டுபோருய்
வந்தவழியேநடந்துகூடு வனத்தைவிட்டுநீஅப்புரம்ஓடு
அடடா-பிறந்தமனையைபோயிசேருபிறவியிருந்தாபோயிபாரு (நன்)
(தெம்) கோபம்பெருகிவள்ளி கூப்பிட்டாளண்ணர்களை
ஆபத்துயேதோவென்று ஆவலுடனேஒடிவாரார் (நன்)
அய்-வேடர்வருகும்வேகம்பார்த்தார் வருமுன்னமேவீசிபோட்டார்
ஓடியெழுந்துவேங்கைமரமாய் ஓங்கிவளர்ந்துதழைத்துநின்ருர்
அப்-எழுபேருந்துடர்ந்துவந்தார் எங்களைஏதுக்கழைத்தாயென்ருர்
வேங்கைமரத்தின்சொகுசைக்கண்டார்வாளையுருவிஎந்திகொண்டார்
அண்ணுஅண்ணுமொழியைக்கேளுமே அருகிலிருந்தாகிழலைதருமே
வெட்டவேண்டாம்பொருங்களண்ணு வேரோஒருவர்காணமண்ணு
எவனோஒருவன்வலைபல்வித்தான் ஏடாகொடமாய்பேசிபோட்டான்
வுங்களையவனும்பார்த்துவிட்டான் ஓடிஎங்கையோமறைந்துவிட்டா
அண்ணு-காட்டோடநடங்கள் காரியம்பாருங்கள்
அருகிலிருங்கள் அழைத்தாவாருங்கள் (நன்)
(தெம்) தங்கைக்குறுதிசொல்லி தனிவழியேவேடரெல்லாம்
சிங்கம்போலேஎழுபேரும் சென்றுவிட்டார்கானகத்தில் (நன்)
ஐயா-வேங்கைமரமாயிருந்தவேலர் வேரோவுருவம்எடுக்கநினைத்து
தாடிசடையும்தளர்ந்தவடிவும் தாங்கிநடக்கசைபிலேகோலும்[பார்
விழுந்துவிழுந்துஎழுந்துநடப்பார் வேடரையழைத்துவழியைகேட்
பழுத்தபழமாய்வுருவுகாட்டுவார் பாதைதெரியலேஎன்று அழுவார்
ஐயா-வேடர்பார்த்தார் விசனமிட்டார்
கூடஅழைத்து கூட்டிவந்தார் (நன்)
(தெம்)தளர்ந்தவயதுடைய தம்பிரானைகண்டவுடன்
யிளம்வயதுவள்ளியற்கு ஏற்றதுணையாகுமென்ருர் (நன்)
ஐயாஐயாபெரியவரே ஆருசனைகளதிகமுண்டோ
யிப்பேர்ப்பட்டகானகத்திலேஎங்கேபோரீர்தனியாநீரும்[கொண்டே
வார்த்தையிவர்க்குகொடுத்துகொண்டே வழியில்மெள்ளநடத்திக்
வள்ளியிருக்கும்புனத்தைக்கண்டே வைத்தார்காவல்பரணையண்டே
ஐயா-ஏழுபேர்க்குந்தங்கையையா ஏற்றதுணைகளில்லையையா
உன்னுடஉயிர்போல்காருமையா ஒருகுறைவுமேசெய்யாளையா
ஐயா-போயிவாரம் பொழுதுநேரம்
யேதுவேலை வருவம்நாளை (நன்)
(தெம்) தாடிசடைநிறைந்த தள்ளாக்கிழவனுக்கு
வேடிக்கையைகாட்டியல்லோ வேளைதோறும்பசியைத்தீர்ப்பாள் (ந)
ஐயா-வலையைவீசிகிளிகள்பிடிப்பாள் வந்துகிழவன்முன்னேவிடுவாள்
தடியையிழுப்பாள்தாடியிழுப்பாள் தழுவியணைத்துமுத்தமிடுவாள்
ஐயா புலிகள்வருதுபாருமென்பாள்போய்பிடிப்போம்வாருமென்பா
தடியைப்பிடிங்கியோடிபோவாள் தரையில்விழுந்தாலெடுத்துவிடுவா
ஐயா-மேலேவிழுவாள் மெள்ளெனக்கடிப்பாள் [ள்
கோலம்புரிவாள் குறிகிப்படுப்பாள்
(தெம்)உண்மைக்கிழவனென்று உயிர்போலகார்க்கையிலே
தண்ணீர்வேணுமென்றுசொல்லி தவிக்கிறேனேண்டி ஆழவகி (நன்)

வரவுகொடுத்தாதிங்கமாட்டான் மாறைபடைக்குதென்றவிழுவான்
வாயைக்குளறிதண்ணீரென்பான் வள்ளியேஉயிருபோகுதென்பான்
அடி-பாவிரெண்டிகொல்லுறானென்பான்பரணைமீதுசாகிறேனென்பான்
கூவியழைத்துதண்ணீரென்பான் குருநகிபடுத்துமூர்ச்சையானான்
ஐயா-பேச்சியற்றான்பிசகலற்றான்மூச்சியற்றான்மோடிசெய்தான் (ந)
(தெம்)பாவிகிழவனாலே பழிசள்வந்துநேருமென்று
தாவியேபுனங்களெல்லாம் தண்ணீர்தேடியலைந்திட்டாளே (நன்)
ஐயா-வனங்கள்முழுதும்அலைந்தனையா வஞ்சிக்காலும்சோர்ந்தனையா
புனங்களெல்லாம்திரிந்தேனையா பொட்டுஜலமுங்கிட்டாதையா
சுனையிலேஜலங்கிடைக்குதையா சொல்லும்வார்த்தைகேளுமையா
பத்திரமாகவாருமையா பழியில்லாமல்கார்ப்பேனையா
என்று-ஏந்தியணைத்தாள்யிருகப்பிடித்தாள்
சாய்ந்துநடந்தாள் சுனையையடுத்தாள் (நன்)
(தெம்)வள்ளிஜலத்தைக்கண்டுவாருமையாசுனையிலென்றாள்
அடி-தள்ளிவிடநினைக்கிறாயோதந்திரங்களறிவன்போடி(ந) [ந்தான்
வள்ளியைகரையில்நிறுத்திபோட்டான்வரட்டுகிழவன்சுனையில்நுழை
கள்ளங்கபடுமாநில்கினைந்தான் கணபதிதன்னைவேண்டிக்கொண்டார்
அடடா-அண்ணாஅண்ணாகணபதியே அடியனுக்கோருதவிசெய்யே
வெள்ளையானைபோல்துரத்திவாயே வள்ளியைஎன்னுடனருகில்சேரே
உனக்குவயறுநிறையகடலைசுண்டல் வாழைகுலையுந்தேங்காயிளநீர்
பயருவுருண்டைதயிருமோரு பாலும்பழம்அவலுங்கடலை
ஐயா-வனக்கு பாங்காத்தருவேன் பசியைத்தீர்ப்பேன்
தாங்கவரியே ஓங்கிதுரத்தே (நன்)
(தெம்) தம்பிநினைத்தவுடன் தாமிசங்கள்செய்யாமலே
கும்பமதயானைபோலே கூச்சலிட்டோடிவாரார் (நன்)
ஐயா-கண்டுஅலரிகூச்சலிட்டாள் கையைவிரித்துஓடிவந்தாள்
பண்டாரமெந்தனைபாருமென்றாள் பறந்துமேலேவிழுந்துபிடித்தாள்
அடடா-அய்யா அய்யா அபயமையா அடியாளெந்தனைகாருமையா
கையுங்காலும்துடிக்குதையா காட்டியானைமிரட்டுதையா
ஐயா-வெள்ளையானைதுரத்துதையா விட்டுவிடுநீபோகாதையா
பெண்ணின்முகத்தைப்பாருமையா பழிகளுனக்குநேருமையா
என்று-கட்டிப்பிடித்தாள் கண்ணீர்விட்டாள்
கிட்டிபிடித்தாள் கிலேசப்பட்டாள் (நன்)
(தெம்)கட்டிப்பிடித்தவுடன் கணபதிக்கிசைகைபண்ணி
சித்திரமயில்மேலேறி சிங்காரமாய்த்தோன்றினாரே (நன்)
ஆறுமுகமும்பன்னிருகரமும் அழகுவேலும்அணிந்தநீறும்
பாரமயிலும்பருத்தவடிவும் பாதசிலம்பின்ஓசையொளியும்
முருகாழகைப்பார்த்துபார்த்து மோகக்கடலில்வள்ளிவேர்த்து
ஆறுமுகமேஅமர்ந்தபொருளே அடியாளெந்தனைசோதித்தாயே
ஐயா-என்றுமபங்கிஎக்கமிட்டாள்நின்றுமயங்கிநிலையைமறந்தாள்(ந)
(தெம்)இதுதான்சமயமென்று எடுத்தணைத்துவேல்முருகர்
ஆவலெல்லாந்தீர்த்துக்கொண்டு அன்னமேநான்போறேனென்றார்(ந)
ஆறுமுகத்தின்வடிவைக்கண்டாள் ஆனந்தமாயேமகிழ்கின்றாள்

அ

# வள்ளியம்மன் அலங்காரம்.

வேறேநினைவுமறந்துபோட்டாள்   விரகமூர்ச்சையாகின்றாள்
ஐயா-எனக்காயித்தனைவடிவுகொண்டு   ஏழைமனதைசோதித்தீர்கள்
கொண்டகருத்தைமுடித்துக்கொண்டீர்   கூசாமலேபோனோனென்றீர்
ஐயா-ஞாயமல்லவேநடுவுமல்லவே   மாயமந்திரஞ்செய்திட்டீரோ(நன்)
(தெ)சத்தியமாய்காளையிங்கு   சரசமாடவருவேனென்று
சுத்திருக்குங்கானகத்தில் சென்றார்முருகர்வேடர்முன்னே
பஞ்சாங்கத்தைகையிலெடுத்தார் பார்ப்பானைப்போல்வடிவெடுத்தார்
அஞ்சாமலேவேடரெதிரே   ஐயர்போலேவருகிறாரே
அடாவனத்திலிங்கேஆரும்பிள்ளாய்வருகுங்கெதியைகேளும்பிள்ளா
ஏழுபேர்க்குப்பிளையமாது   யிருப்பதுண்டாவள்ளியென்று
அடடா-கந்தனென்றகன்னக்காரன்கன்னியைசிறைஎடுக்கவருவான்
நாளைபொழுதுபாதியிரவில்   நடக்கப்போறசேதியுரைத்தேன்
அடடா-குகையிலிடுங்கதவைபோடுங்களேழுபேருமாகாத்திருங்க(ந)
(தெம்)திருட்டுபஞ்சாங்கமதை தீரமுடன்சொல்லிவிட்டு
சிறையெடுக்குங்கள்ளனைப்போல் சுப்பிரமணியர்வடிவெடுத்தார் (ந)
அய்யருரைத்தகட்டளைபோல   அழகுவள்ளியைகுகையில்விட்டார்
ஏழுபேருமாய்க்கத்தியுருவி   ஏமாறுமலேகாத்திருந்தார்
திருடனைபோல்வடிவெடுத்தார் திருட்டுகந்தனும்நெருங்கிகொண்டார்
திருநீறெடுத்துஓதிப்போட்டார்   தேவிவள்ளியைதூக்கிகொண்டார்
அ-குகையைவிட்டுகடந்துவந்தார் கூச்சலிட்டிவர்மூர்ச்சைதெளிந்தார்
தெரிந்துவழியில்மடக்கிக்கொண்டார் திருடனென்றுவெட்டவந்தார்
அப்போபஞ்சாட்சரத்தைஓதிவிட்டார்படுக்கமூர்ச்சையாக்கிவிட்டா
அஞ்சிவள்ளியுங்காலில்விழுந்து   அண்ணமார்களைஎழுப்புமென்றாள்
அப்போ-மூர்ச்சைதெளிய மொழிகளுரைத்தார்
வாழ்த்தியெழுப்பி வரத்தைக்கொடுத்தார் (நன்)
(தெம்)கைகட்டிவாய்புதைத்து கந்தருடன்யேதுசொல்வார்
மெய்யையறியாமலே வேதனைகள்நினைத்தோமையா (நன்)
ஐயாவள்ளியைகேட்டாதரவுமாட்டமாவனத்திலிப்படிவரவும்வேணு
எங்களைசோதிக்கநேரமாகுமா   ஏனோயித்தனைகோலமாகுமோ[மா
ஐயா-ஏதுகுறைகள்செய்தபோதும் எல்லாம்பொறுத்துஅருளைதாரு
சூதும்வாதும்அறியமாட்டோம் சோதனைக்கெதிராகமாட்டோம்[ம்
அபயமென்றார் அஞ்சிகின்றார்விபரமென்றார்வேண்டிகொண்டார் (ந)
(தெம்)வள்ளியிட அண்ணருக்கு வாழ்த்திவரங்கொடுத்து
புள்ளிமயிலேறியல்லோ போயமர்ந்தார் தணிகைமலை (நன்)
வேலும்வாழிமயிலும்வாழி   வனத்துவேடகுரத்திவாழி
இந்திரனீன்றதெய்வயானை   எந்தனளும்சுகமாய்வாழி
ஆறுமுகத்துகடவுள்வாழி   அண்டரண்டமேழும்வாழி
பாடிபடித்துபதமுறைத்தோர்   பலத்தகுடியாய்பெருத்துவாழி
ஐயா-மண்ணும்வாழிவிண்ணும்வாழி   மதியும்வாழிரவியும்வாழி(ந)
(தெம்)சிறுமணவூரொன்னும்பதி சிறுவன்முனிசாமிகவி
அருமையாய்க்கந்தர்பாதம் அலங்காரமாய்துதிமனமே (நன்)

வள்ளியம்மன் அலங்காரம்-முற்றிற்று.